சொற்பொருள்.

கொலையாளியின்பெயர்—காதகன்-கொலைத்தொழிலுடையோன். சாருகன்-பீடைசெய்வோன். வேதனைசெய்வோன்பெயர்—வேதனைசெய்வோன்-வருத்தஞ்செய்வோன். அருந்துதன்-புண்படக்குடைவோன். அச்சமுள்ளோன்பெயர்—அச்சமுள்ளோன்-பயமுள்ளோன். பீதன்-பயமுடையோன். சகிதன்-பொறுமையுடையவன். பீரு-பயமுடையவன். வேகியின்பெயர்—வேகி-வேகமுடையோன். சவநன்-மிக்ககதியுடையவன். வஞ்சகன்பெயர்—வஞ்சகன்-கபடமுடையவன். நிசாதன்-பாவமுடையவன். எ-று. (௪௩)

செய்யுள்.

படிறர்பல்லவர்பரத்தர்பகரிடங்கழியரோடு
விடருங்காமுகருந்தூர்த்தர்மிக்கநாகரிகரென்ப
கடிநகர்ப்பதிவாழ்கின்றசதுரர்காமுகரென்னும்பேர்
அடைவுளகிராமமுற்றோன்கிராமியனாகுமன்றே.

சொற்பொருள்.

தூர்த்தர்பெயர்—தூர்த்தர்-பரதாரத்தை வஞ்சித்துப் பிடிப்பவர். பல்லவர்-உறுதியில்லாதவர். பரத்தர்-பிறன்மனைவியைச் சேர்வோர். இடங்கழியர்-இடத்தினின்று கழிக்கப்படுவோர். விடர்-அணுப்புதலுடையவர். காமுகர்-மிக்கவிருப்புடையவர். நாகரிகர்பெயர்—நாகரிகர்-நாகரிகமுடையவர். சதுரர்-சாமர்த்தியமுடையவர். காமுகர்-விரும்பப்படுவோர். கிராமமுற்றோன்பெயர்—கிராமியன்-கிராமத்திலிருப்போன். எ-று. (௪௪)

செய்யுள்.

வலவைவல்லுநனேவல்லோன்மாட்டார்பேர்வல்லாரென்ப
குலமுளோன்குலீநனாகுங்கரியவன்குறித்தகள்வன்
உலவுநோயுற்றொழிந்தோனுல்லாகன்பதாதிகாலாள்
அலைவில்சந்நத்தனென்பவாயத்தமானோன்பேரே.

சொற்பொருள்.

வல்லோன்பெயர்—வலவை-வன்மையுடையோன். வல்லுநன்-வல்லமையுடையவன். மாட்டார்பெயர்—மாட்டார்-வன்மையில்லாதவர். வல்லார்-வல்லவராகாதவர். குலமுளோன்பெயர்—குலீநன்-நற்குலமுடையவன். கரியவன்பெயர்—கரியவன்-கருநிறமுடையோன். கள்வன்-கருநிறமுடையவன். நோயுற்றொழிந்தோன்பெயர்—நோயுற்றொழிந்தோன்-நோயடைந்து நீங்கினவன். உல்லாகன்-நோய்நீங்கி வன்மைபெற்றவன். காலாளின்பெயர்—காலாள்-காலாற் செல்லுவது. பதாதி-காலாற் செல்வது. ஆயத்தமானோன்பெயர்—ஆயத்தமானோன்-போருக்கு முயற்சியுள்ளவன். சந்நத்தன்-சட்டைபூண்டு நிற்போன். எ-று. (௪௫)

செய்யுள்.

பந்தனேகூர்மையில்லோனக்கனிர்வாணிநாமம்
வெந்திறலியவுளென்பமிகுபுகழாளன்பேரே
உந்தியவருளோனேகாருண்ணியனென்பரெட்டர்
வந்திகள்கவிகள்கற்றோர்வண்டரேகடிகைமாக்கள்.

## சொற்பொருள்.

கூர்மையில்லோன்பெயர்—மந்தன் - கூரியபுத்தியில்லாதவன். நிர்வாணியின்பெயர்—நிர்வாணி-வஸ்திரமில்லாதவன். நக்கன்-வெட்கமுடையவன். மிகுபுகழாளன்பெயர்—இயவுள் - செல்லுகையுடையோன். அருளோன் பெயர்—காருண்ணியன்-கருணையுடையவன். கடிகைமாக்கள்பெயர்—கடிகைமாக்கள் - நாழிகையறிவிப்போர். எட்டர்-விருப்பத்தைக் கொடுப்பவர். வந்திகள் - துதிசொல்வோர். கவிகள்-புகழ்ந்து பாடுவோர். கற்றோர்-மங்கலகவிகளைக் கற்றவர். வண்டர்-தொனிசெய்வோர். எ-று. (சகூ)

## செய்யுள்.

புரவலனீகையாளன்போற்றும்வேளாளன்றியாகி
உரைகெழுவேள்வியாளனுபகாரிகொடையுளோனும்
வரைவறக்கொடுப்போன்வள்ளல்வள்ளியோனென்றுகூறும்
இரவலன்பரிசிலாளன்யாசகன்றீனனேற்போன்.

## சொற்பொருள்.

கொடையுளோன்பெயர்—புரவலன்-கொடையுடையவன். ஈகையாளன்-கொடையாளி. வேளாளன்-கொடையாளி. தியாகி-(பொருளைப் பிறரிடம்) விடுதலுடையவன். வேள்வியாளன்-கொடையாளி. உபகாரி-உபகாரமுடையவன். வரைவறக் கொடுப்போன்பெயர்—வரைவறக் கொடுப்போன்-வரைவின்றிக்கொடுப்போன். வள்ளல்-மிகக் கொடுப்போன். வள்ளியோன்-பெருங் கொடையாளன். ஏற்போன்பெயர்—இரவலன் - இரத்தற்றொழிலுடையோன். பரிசிலாளன்-பெற்றதனையாள்வோன். யாசகன்-பிரார்த்தித்துக் கேட்போன். தீனன் - கேடுடையவன். எ-று.

புரவலன் என்பதற்குப் புரத்தல்வல்லன் எனவும், இரவலன் என்பதற்கு இரத்தல்வல்லன் எனவும் நச்சினார்க்கினியர் கூறுவர். (ளஎ)

## செய்யுள்.

கரவடர்சோரர்தேனர்பட்டிகர்புரையோர்கள்வர்
திருடராந்தரித்திரன்பேரகிஞ்சனன்றீநன்பேதை
மருவுநல்கூர்ந்தோனில்லோன்வறியனாதுலனேயேழை
யிரவியவுறுகணாளனிலம்பாட்டோன்மிடியனாமே.

## சொற்பொருள்.

திருடர்பெயர்—கரவடர்-கபடமுடையவர். சோரர் - திருடுதலுடையவர். தேனர்-திருடுவோர். பட்டிகர்-களவுசெய்பவர். புரையோர்-குற்றமுடையோர். கள்வர்-களவுசெய்பவர். தரித்திரன்பெயர்—தரித்திரன்-கேடான நிலையுடையவன். அகிஞ்சனன் - சிறிதும் பொருளில்லாதவன். தீநன் - கேடுடையவன். பேதை-பேய்போலஎண்ணப்படுவோன். நல்கூர்ந்தோன்-நல்குரவடைந்தோன். வறியன்-வறுமையுடையவன். ஆதுலன் - நோயுடையவன். ஏழை-இகழப்படுவோன். இலம்பாட்டோன்-பொருளின்மையுடையவன். மிடியன்-வறுமையுடையவன். எ-று. (ளஅ)

## செய்யுள்.

வயவனேதிறலோன்மற்றைவண்டனேமிண்டன்மள்ளன்
வியவனேவிறலோன்மீளிவீரனேதிண்ணியன்பேர்
நயமில்கூளியரேருளர்நாட்டும்வாளுழவர்மள்ளர்
சயமிகுமறவர்தானைத்தலைவராம்படருமாமே.

## சொற்பொருள்.

திண்ணியன்பெயர்—திண்ணியன்-திண்மையுடையவன். வயவன்-வலிமையுடையவன். திறலோன்-வலிமையுடையவன். வண்டன், மிண்டன்-மிண்டுதலுடையவன். மள்ளன்-வலிமையுடையவன். வியவன்-ஏவலுடையவன். விறலோன்-வலிமையுடையவன். மீளி-வலிமையுடையவன். வீரன் - வீரமுடையவன். தானைத்தலைவர்பெயர்—தானைத்தலைவர்-சேனைக்குத் தலைவர். கூளியர் - இடபம்போலும் வலிமையுடையவர். ஏருளர்-இடபம்போலும் வலிமையுடையவர். வாளுழவர்-வாளாற்றொழில்செய்வோர். மள்ளர்-வலிமையுடையவர். மறவர்-வலிமையுடையவர். படர்-போர்செய்பவர். எ-று. (௪௯)

## செய்யுள்.

அரிகளேசெறுநர்சேராரமராருள்ளாரேநள்ளார்
மருவலர்தெவ்வர்மாணார்மாற்றலர்மன்னாரொன்னார்
தரியலரொட்டார்வட்கார்சார்பிலார்பற்றார்செற்றார்
பரரொடுகேளாரொல்லார்பகைவர்பேரெழுமூன்றுமே.

## சொற்பொருள்.

பகைவர்பெயர்—பகைவர்-பிரிவுடையோர். அரிகள்-போருக்கு வருவோர். செறுநர்-செறுதலுடையவர். சேரார்-சேராதவர். அமரார்-விரும்பாதவர். உள்ளார்-நினையாதவர். நள்ளார்-நண்புசெய்யாதவர். மருவலர் - பொருந்தாதவர். தெவ்வர்-பகையுடையவர். மாணார்-மாட்சிமைப்படாதவர். மாற்றலர்-மாறுபாடுடையவர். மன்னார்-பொருந்தாதவர். ஒன்னார்-பொருந்தாதவர். தரியலர்-தரியாதவர். ஒட்டார்-சேராதவர். வட்கார்-கோபம் மழுங்காதவர், நாணமுடையவர். சார்பிலார்-பற்றில்லாதவர். பற்றார்-பற்றுதலில்லாதவர். செற்றார்-செறுதலுடையவர். பரர்-கொல்லத்திரிவோர். கேளார்-கேளாதவர். ஒல்லார்-பொருந்தாதவர். எ-று. (௫௦)

## செய்யுள்.

ஒல்லுநர்தொடர்ந்தார்சேர்ந்தாரொட்டுநர்பெட்டார்வேட்டா
புல்லுநர்பசைந்தார்மித்திரர்புரிந்தாரார்வலர்விழைந்தார் [ர்
நல்லவர்காதலித்தார்நள்ளுநர்நயந்தார்கூட்டம்
மெல்லவொன்றுநர்மூவாறுமேவினர்நாமமாமே.

## சொற்பொருள்.

மேவினர்பெயர்—மேவினர்-விரும்பினவர். ஒல்லுநர்-பொருந்துதலுடையவர். தொடர்ந்தார்-தொடர்தலுடையவர். சேர்ந்தார்-சேர்ந்தவர். ஒட்டுநர் - சேர்தலுடையவர். பெட்டார்-விருப்பமுடையவர். வேட்டார்-வேட்கையுடையவர். புல்லுநர்-தழுவுதலுடையவர். பசைந்தார்-அன்புடையவர். மித்திரர் - சிநேகஞ்செய்வோர். புரிந்தார்-அன்புசெய்வோர். ஆர்வலர்-விருப்பமுடையவர்.

விழைந்தார்-விரும்பினவர். நல்லவர்-நன்மைசெய்பவர். காதலித்தார்-விரும்பினவர். நள்ளுநர்-நட்புடையவர். நயந்தார்-விரும்பினவர். கூட்டம் - கூடுதலுடையவர். ஒன்றுநர்-பொருந்துதலுடையவர். எ-று. (ருக)

செய்யுள்.

உற்றவரிருளைநட்டோருறவொக்கல்கிளையேசார்ந்தோர்
பற்றினர்சிறந்தோர்நட்புப்பந்தமேபரிசனங்கேள்
குற்றமினண்புகூளிகுடும்பமேகடும்புநள்ளி
சுற்றமூவாறுபேருஞ்சூழ்ந்தபாசனமுஞ்சொல்லும்.

சொற்பொருள்.

சுற்றத்தின்பெயர்—சுற்றம்-சூழவிருப்போர். உற்றவர்-சேர்ந்தவர். இருளை, நட்டோர் - நண்புடையவர். உறவு-சேர்வுடையவர். ஒக்கல் - ஒத்துநடப்பவர். கிளை-கிளைபோல்பவர். சார்ந்தோர்-பற்றுதலுடையவர். பற்றினர் - பற்றுடையவர். சிறந்தோர்-மிக்கவர். நண்பு-நட்டலுடையவர். பந்தம் - பிரியஞ்செய்பவர். பரிசனம்-சூழவிருக்குஞ்சனம். கேள்-உரிமையுடையோர். நண்பு-சிநேகமுடையவர். கூளி, குடும்பம்-தாங்குவோர். கடும்பு-காத்தலுடையவர். நள்ளி - நண்புடையவர். பாசனம். எ-று. (ருஉ)

செய்யுள்.

பொறியிலார்கயவர்நீசர்புள்ளுவர்புல்லர்தீயோர்
சிறியசிந்தையர்கனிட்டர்தீக்குணர்தீம்பர்தேரார்
முறையிலார்முசுண்டர்மூர்க்கர்முசுடர்பல்லவரேகையர்
மறைவிலாக்கலர்மூவாறுமன்னுபூரியருங்கீழோர்.

சொற்பொருள்.

கீழோர்பெயர்—பொறியிலார்-நல்வினையில்லாதவர். கயவர் - ஒழுக்கந்தவறினவர். நீசர்-நீசத்தன்மையுடையவர். புள்ளுவர்-வஞ்சகமுடையவர். புல்லர் - புன்மையுடையவர். தீயோர்-தீமைசெய்பவர். சிறியசிந்தையர்-அற்பவெண்ணமுடையவர். கனிட்டர்-சிறுமையுடையவர். தீக்குணர்-துர்க்குணமுடையவர். தீம்பர்-தீங்குடையவர். தேரார்-அறிவில்லாதவர். முறையிலார்-நீதியில்லாதவர். முசுண்டர், மூர்க்கர்-மோகமுடையவர். முசுடர், பல்லவர் - நிலையற்றவர். கையர்-சிறுமையுடையவர். கலர்-தருமநெறியினின்று விலகினவர். எ-று.

சிறியர் சீத்தையர் எனவும் முறையிலா முசுண்டர் எனவும் பாடபேதமுமுண்டு. சிறியர்-சிறுமையுடையவர். சீத்தையர்-சீ என்று இகழப்படுவோர் (ருஙு)

செய்யுள்.

மூழுமகன்சிதடன்பேதைமூடனேமண்ணையஞ்ஞை
இழுதையேமடனேயாதனேழையேயறிவிலான்பேர்
தொழுவர்கம்மியரேமற்றைத்தொழில்செய்வோர்நாமமாகும்
வழுவிலாவாயிலாளர்வாயில்காப்போர்தம்பேரே.

சொற்பொருள்.

அறிவிலான்பெயர்—அறிவிலான்-அறிவில்லாதவன். மூழுமகன் - அறிவு நுழைதற்கேற்ற புரையில்லாத மகன். சிதடன்-அறிவுகுருடானவன். பேதை-

பேய்த்தனமுடையவன். மூடன்-மயக்கமுடையவன். மண்ணை-பேய்போல்பவன். அஞ்ஞை-அறிவில்லாதவன். இழுதை-இழுக்குடையவன். மடன்-அறிவில்லாதவன். ஆதன் - சோபமுள்ளவன். ஏழை - இகழப்படுவோன். தொழில்செய்வோர்பெயர்—தொழுவர் - தொழுதலுடையவர். கம்மியர் - தொழிலுடையவர். வாயில்காப்போர்பெயர் — வாயிலாளர் - வாயிலிலே நிற்றலுடையவர். எ-று. (ருச)

செய்யுள்.

அரிவையங்கனை மடந்தையாடவளாட்டிமாயோள்
சுரிகுழன் மகடூஉக்காந்தைசுந்தரிவனிதைமாது
தெரிவைமானினியேநல்லாள்சிறுமியேதையஞரி
பிரியைகாரிகையணங்குபிணாப்பெண்டுபேதைபெண்பேர்.

சொற்பொருள்.

பெண்பெயர்.—பெண்-விரும்பப்படுபவள். அரிவை, அங்கனை-நல்லுறுப்புடையவள். மடந்தை -அறியாமையுடையவள். ஆடவள், ஆட்டி, மாயோள்-மாயமுடையவள். சுரிகுழல்-சுரித்த கூந்தலுடையவள். மகடூஉ, காந்தை-விரும்பப்படுபவள். சுந்தரி-அழகுடையவள். வனிதை-புருடனையுடையவள். மாது-அழகுடையவள். தெரிவை-தெரிந்துகொள்ளப்படுபவள். மானினி-மானமுடையவள். நல்லாள்-சிறப்புடையவள். சிறுமி-சிறுமையுடையவள். தையல் - தன்னையலங்கரிப்பவள். நாரி-புருடனை வசப்படுத்துபவள். பிரியை - பிரியஞ்செய்பவள். காரிகை-அழகுடையவள். அணங்கு-பெருமையுடையவள். பிணா-விரும்பப்படுபவள். பெண்டு - விரும்பப்படுபவள். பேதை - பேய்த்தனமுடையவள். எ-று. (ருரு)

செய்யுள்.

ஆடவன்மைந்தன்காளையாடூஉவேமகன்புமானே
நீடியகுமரனேமூன்றிருமித்தபுருடனும்
நாடியநம்பியோடுநங்கையென்றிரண்டாண்பெண்ணைத்
தேடியகவிகளெல்லாஞ்சிறப்பிக்குநாமமாமே.

சொற்பொருள்.

புருடன்பெயர்—புருடன்-பிராணிகளைக் காப்பவன். ஆடவன்-வெற்றிபெறுதற்குரியவன். மைந்தன்-வலிமையுடையவன். காளை-காளைபோல்பவன். ஆடூஉ-வெற்றிபெறுதற்குரியவன். மகன், புமான்-பிறரைக்காப்பவன். குமரன்-குற்றங்களைக் கெடுப்போன். ஆணைச்சிறப்பிக்கும்பெயர்—நம்பி - நமக்கு இன்னன் என வியந்து சொல்லப்படுவோன். பெண்ணைச்சிறப்பிக்கும்பெயர்—நங்கை - நமக்கு இன்னள் என வியந்து சொல்லப்படுபவள். எ-று. (ருசு)

செய்யுள்.

பேதையேபெதும்பைமங்கைபெருகியமடந்தையோடு
தீதிலாவரிவைமற்றைத்தெரிவைபேரிளம்பெண்ணென்ப
ஏதமில்பருவமாண்டேழெய்துபன்னொன்றுபன்மூன் [தே.
றேறுதுபத்தொன்பானையைந்துடன்முப்பத் தொன்றெண்ணந்

### சொற்பிரிவு.

ஏழைகைப்பெண் பருவத்தின்பெயர்—பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் இப்பருவம் ஏழுக்கும் ௭, ௧௧, ௧௩, ௧௯, ௨௫, ௩௧, ௪௦. என்பன முறையே ஆண்டுகளாகும். எ-று. (௫௭)

### செய்யுள்.

முன்னியகைம்மைபெற்றோன்மொழிந்தகோளகனேயாகும்
பின்னைவேற்றோற்குப்பெற்றபிள்ளைகுண்டகனையென்ப
பன்னிவாழ்க்கைப்படாமுன்படாந்தொருகளவினாலே
கன்னியேபெற்றபிள்ளைகானீனனென்றேயோதும்.

### சொற்பொருள்.

கைம்மைபெற்றோன்பெயர்—கோளகன் - மறைவாகக் காக்கப்படுவோன். வேற்றோற்குப் பெற்றபிள்ளையின்பெயர்— குண்டகன் - பெண்ணின் குலத்தை அழிப்பவன். கன்னிபெற்றபிள்ளையின்பெயர்—கானீனன் - கன்னியிடம் பிறந்தவன். எ-று. (௫௮)

### செய்யுள்.

உயர்ந்தநாற்குலத்திலாண்பெண்ணுயர்விழிவிரண்டுங்கூடி
இயங்கியபிள்ளைப்பேரேயநுலோமனென்றுகூறும்
நயந்தவப்பெண்ணுமாணுநண்ணியவுயர்வுதாழ்வில்
வியந்திடும்பிள்ளைப்பேரேவிறற்பிரதிலோமனாமே.

### சொற்பொருள்.

நாற்குலத்துளுயர்குலத்தாணுமிழிகுலப்பெண்ணுங் கூடிப் பெற்ற பிள்ளையின்பெயர்—அநுலோமன் - கிரமமான கலப்பிற் பிறந்தவன். உயர்குலப்பெண்ணுமிழிகுலத்தாணுங் கூடிப் பெற்ற பிள்ளையின்பெயர்—பிரதிலோமன் - கிரமமற்ற கலப்பிற் பிறந்தவன். எ-று. (௫௯)

### செய்யுள்.

பெருத்தவவ்வநுலோமன்னேபிரதிலோயனென்றபேரில்
உரைத்தவாண்பெண்ணில்வந்தேயுற்றவனந்தராளன்
கிரைத்தவர்மாறிக்கூடிப்பிறந்தவனீண்டபேரே
விரித்ததுவினவிக்கேட்கில்விராத்தியனென்னுநூலே.

### சொற்பொருள்.

அநுலோமத்தாணும் பிரதிலோமப்பெண்ணுங் கூடிப் பெற்ற பிள்ளையின் பெயர்—அந்தராளன் - கலப்புவருணமுடையவன். அநுலோமப்பெண்ணும் பிரதிலோமத்தாணுங் கூடிப்பெற்ற பிள்ளையின்பெயர்—விராத்தியன் - விலக்கப்படுவோன். எ-று. (௬௦)

### செய்யுள்.

முந்தியகுரத்தியத்தைமுதல்விகோமாட்டியாசாள்
தந்திடுமிறைவியையைசாமியேதலைவிநாமம்

நந்தியபிண்டிவாமனன்னெறிவழாதுநோற்பாள்
கந்தியேயௌவையம்மைகன்னியேகவுந்தியென்ப.

சொற்பொருள்.

தலைவிபெயர் —தலைவி-பெருமையுடையவள். குரத்தி - கௌரவமுடையவள். அத்தை-செல்வமுடையவள். முதல்வி-முதன்மையுடையவள். கோமாட்டி-கோமானுக்குரியவள். ஆசாள்-ஒழுக்கமுடையவள். இறைவி - தலைமையுடையவள். ஐயை-பூசிக்கப்படுபவள். சாமி-செல்வமுடையவள். ஆருகதமத நோற்பாள்பெயர்—நோற்பாள்- தவஞ்செய்பவள். கந்தி, ஔவை, அம்மை, கன்னி, கவுந்தி. எ-று. (சுக)

செய்யுள்.

கைம்மையேகைனிபூண்டகலன்கழிமடந்தையோடு
விம்மியவிதவைநான்கேயமங்கலைவிளங்குநாமம்
மைம்மையேவந்தியென்பமலடிக்குவகுத்தபேராஞ்
செம்மையாங்கோலஞ்செய்வாடிகழ்வண்ணமகளேயென்ப.

சொற்பொருள்.

அமங்கலையின்பெயர்—அமங்கலை-மங்கலமில்லாதவள். கைம்மை-சிறுமையுடையவள். கைனி-சிறுமையுடையவள். கலன்கழிமடந்தை-ஆபரணங் கழித்தற்குரிய பெண். விதவை-நாயகனில்லாதவள். மலடியின்பெயர்—மலடி-பிள்ளையின்மையாகிய குற்றமுள்ளவள். மைம்மை-பிள்ளையின்மையாகிய குற்றமுள்ளவள். வந்தி-கருப்பந் தடையாதலுடையவள். கோலஞ்செய்வாள்பெயர்—கோலஞ்செய்வாள் - அழகு செய்பவள். வண்ணமகள் - அலங்காரஞ் செய்யுமகள். எ-று. (சுஉ)

செய்யுள்.

பரத்தையேகணிகைசூளைபயனிலாள்வரைவின்மாது
பொருட்பெண்டுபெறுவகொள்வாள்விலைமகள்போற்றும்வேசை
விருத்தையேமூத்தாளென்பமின்னிடைக்குமரிகன்னி
நிருத்தஞ்செய்மாதுகூத்திநாடகக்கணிகைநீள்பேர்.

சொற்பொருள்.

வேசையின்பெயர்—வேசை-பலவித வேஷங்களைத் தரிப்பவள். பரத்தை-பிறனைப் புணர்பவள். கணிகை-தூர்த்த குணங்களையுடையவள். சூளை-வஞ்சினை முடையவள். பயனிலாள்-பிரயோசனமில்லாதவள். வரைவின்மாது-விவாகமில்லாத பெண். பொருட்பெண்டு - பொருளை விரும்பும் பெண். பெறுவகொள்வாள்-காமுகர் பெறுபவைகளைக் கவர்ந்துகொள்பவள். விலைமகள்-தன் போகத்தை விற்கும் பெண். மூத்தாள்பெயர்—விருத்தை-இளமையில்லாதவள். குமரியின்பெயர்—குமரி-இளம்பருவமுடையவள். கன்னி-விரும்பப்படுபவள், பிரகாசமுள்ளவள். நாடகக்கணிகையின்பெயர்—நாடகக்கணிகை-நாட்டியஞ்செய்யுங் கணிகை. நிருத்தமாது-நிருத்தஞ்செய்யும் பெண். கூத்தி-கூத்தாடுபவள். எ-று.

குமரி என்பதைக் குமாரி என்னும் ஆரியபதத்தினின்று வந்ததாகக் கொண்டு கிரீடைக்குத் தக்கவள் எனப் பொருள்கூறினும் பொருந்தும். (சுங)

செய்யுள்.

குட்டினிதொழுத்தைகூளிகுறளியேபடுவிகுண்டந்
துட்டையேயசதியாகுஞ்சூழ்ந்திடும்யுவதியேயீ
ரெட்டாண்டிற்பெண்மதங்கியெய்தியவிறலியென்ப
இட்டமாம்பாடுவிச்சிதம்பதியிரட்டையாண்பெண்.

சொற்பொருள்.

அசதியின்பெயர்—அசதி-கற்பில்லாதவள். குட்டினி-குடும்பத்தைக் கெடுப்பவள். தொழுத்தை-தொழுதுநிற்குந்தன்மையுடையவள். கூளி, குறளி-சிறுமையுடையவள். படுவி-சாமர்த்தியமுடையவள். குண்டம், துட்டை - தீங்குடையவள். பதினாறாண்டிற் பெண்பெயர்—யுவதி - புருடனுடன் கூடினவள். பாடுவிச்சியின்பெயர்—மதங்கி- மகிழ்விப்பவள், மத்தளமுடையவள். விறலி - விறல்படப் பாடுபவள். தம்பதியின்பெயர்—தம்பதி-பெண்ணுமாணுமாகிய இருவர். இரட்டை-பெண்ணுமாணுமாகிய இருவர். ஆண்பெண்-ஆணும் பெண்ணுமாகியவிருவர். எ-று.

அசதி-சோரநாயகனோடு கூட்டிவிடுபவள். (௬௪)

செய்யுள்.

குறவர்கானவரேமள்ளர்குன்றவர்புனவரோடும்
இறவுளர்குறிஞ்சிதன்னின்புறுமாக்கள்பேரே
குறியறிகுறத்திமற்றைக்கொடிச்சிபெண்ணிறைவன்றானே
திறன்மிகுமலையன்வெற்பன்சிலம்பன்கானகநாடன்பேர்.

சொற்பொருள்.

குறிஞ்சிநிலமாக்கள்பெயர்—குறவர்-குறும்புசெய்பவர். கானவர்-காட்டில் வசிப்பவர். மள்ளர்-வலிமையுடையவர். குன்றவர்-மலையிற் சஞ்சரிப்பவர். புனவர்-புனங்களைக் காப்பவர். இறவுளர்-குறிஞ்சிநிலத்தில் வசிப்பவர். குறிஞ்சிநிலப் பெண்பெயர்—குறத்தி, கொடிச்சி. குறிஞ்சிநிலத்திறையின்பெயர்—மலையன், வெற்பன், சிலம்பன், கானகநாடன். எ-று.

கானகநாடன் என்பதற்குக் காட்டிற்குள்ளாகிய நாடுடையோன் என்பர் நச்சினார்க்கினியர். (௬௫)

செய்யுள்.

கோளுறுமறவரோடுமெயினரேகுறித்தபாலை
யாளர்புள்ளுவரிறுக்கரனைத்துமாமவரோடாடும்
வாளவிழியெயிற்றிவன்கட்பிணாவொடுமறத்திபெண்பேர்
மீளியேகாளையென்பவிடலையுந்தலைவனுமம்.

சொற்பொருள்.

பாலைநிலமாக்கள்பெயர்—மறவர்-பாவத்தொழிலுடையவர். எயினர்-எயின்குடியிலுள்ளவர். புள்ளுவர்-கபடமுடையவர். இறுக்கர். பாலைநிலப்பெண்பெயர்—எயிற்றி. வன்கட்பிணா-கொடுந்தொழிலுடைய பெண். மறத்தி. பாலைநிலத்தலைவன்பெயர்—மீளி, காளை, விடலை. எ-று.

புள்ளுவர் என்பதற்குப் புள்ளிஞோசையைத் தம்மிடமுடையவர் என்பர் நச்சினார்க்கினியர். (சுசு)

செய்யுள்.

குறவர்மாகுலவர்வெய்யகுன்றவர்கிராதர்மற்றை
மறவர்கானவரேதீயவனசரர்சவரர்சொல்லும்
முறையழிகொலைஞர்பாவமூர்த்திகண்முருடர்சற்றும்
பொறையிலாரெயினர்வேடர்புளிஞரீரேழ்பொதுப்பேர்.

சொற்பொருள்.

புளிஞர்பெயர்—புளிஞர்-மிக்கபெலமுடையவர். குறவர், மாகுலவர், குன்றவர், கிராதர்-கி என்னுந் தொனியுடன் பறவைகளை அழைப்பவர். மறவர், கானவர், வனசரர்-காட்டிற்சஞ்சரிப்போர். சவரர்-காட்டிலிருந்துகத்துவோர். கொலைஞர்-கொலைத்தொழிலுடையவர். பாவமூர்த்திகள் - பாவசரீரமுடையவர். முருடர்-நேர்மையில்லாதவர். பொறையிலார்-பொறுமையில்லாதவர். எயினர், வேடர்-வேட்டைத்தொழிலுடையவர். எ-று. (சுஎ)

செய்யுள்.

முல்லையர்பொதுவரண்டர்முந்துகோவிந்தரேயான்
வல்லவர்குடவர்பாலர்மதித்தகோவலர்கோபாலர்
சொல்லியவமுதராயர்தொறுவரேயிடையரென்ப
முல்லையின்மாக்கள்பேர்தாமுந்நான்குமொன்றுமாமே.

சொற்பொருள்.

முல்லைநிலமாக்கள்பெயர்—முல்லையர்-முல்லைநிலமுடையவர். பொதுவர்-பொதுவானவர். அண்டர்-பசுக்களையடைபவர். கோவிந்தர்-பசுக்களை அடைபவர். ஆன்வல்லவர் - பசுக்காத்தலில் வல்லவர். குடவர் - பசுக்களையுடையவர். பாலர்-பசுக்களைக்காப்பவர். கோவலர்-பசுக்காத்தலில் வல்லவர். கோபாலர்-பசுக்காப்பவர். அமுதர்-பால் என்னும் அமுதமுடையவர். ஆயர்-பசுத்திரளைக் காப்பவர். தொறுவர்-பசுக்களையுடையவர். இடையர்-பசுக்காப்பவர். (இடை-பசு.) எ-று.

அமரநிகண்டிலே வல்லவர் என்பதும் இடையர்பெயர். வல்லவர்-தைரியமில்லாதவர். (சுஅ)

செய்யுள்.

தொறுவியேபொதுவியாய்ச்சிசூழ்ந்திடுங்குடத்திமற்றை
நிறைபுணரிடைச்சிமுல்லைநிலத்திற்பெண்ணும்மமைந்தாங்
குறைவறுகானநாடன்குறும்பொறைநாடனேடு
முறைசெயுமண்ணறோன்றன்முல்லையிற்றலைவனமம்.

சொற்பிரிவு.

முல்லைநிலப்பெண்பெயர்—தொறுவி, பொதுவி, ஆய்ச்சி, குடத்தி, இடைச்சி. முல்லைநிலத்தலைவன்பெயர்—கானநாடன், குறும்பொறைநாடன், அண்ணல், தோன்றல். எ-று. (சுகூ)

செய்யுள்.

களமரேதொழுவர்மள்ளர்கம்பளருழவரோடு
விளைஞரேகடைஞரேழ்பேர்விளைவுறுமருதமாக்கள்
அளவறுகடைசிமற்றையாற்றுக்காலாட்டிபெண்பேர்
உளமகிழ்மகிழ்நனூரன்கிழவனுந்தலைவனுமே.

சொற்பொருள்.

மருதநிலமாக்கள்பெயர்—களமர்-நெல்விளைவிப்போர். தொழுவர்-தொழில் செய்பவர். மள்ளர், கம்பளர்-ஆரவாரமுடையவர். உழவர்-உழுதொழிலுடையவர். விளைஞர் - நெல்விளைவிப்போர். கடைஞர்-கடைக்குலமுடையவர். மருதநிலப்பெண்பெயர்—கடைசி, ஆற்றுக்காலாட்டி. மருதநிலத்தலைவன்பெயர்—மகிழ்நன், ஊரன், கிழவன். எ-று.

களமர் என்பதற்கு நெற்களத்திலே தொழில் செய்பவர் என்பர் நச்சினார்க்கினியர். (எ0)

செய்யுள்.

பரதவர்நுளையரோடுபஃறியர்திமிலர்சாலர்
கருதியகடலர்கோலக்கழியரேநெய்தன்மாக்கள்
விரவியபரத்திமேவுநுளைச்சியேயளத்திநீண்டு
பெருகியகடற்பிணாவேநெய்தலிற்பெண்ணினாமம்.

சொற்பொருள்.

நெய்தனிலமாக்கள்பெயர்—பரதவர், நுளையர், பஃறியர்-தோணியிற்றொழிலுடையவர். திமிலர்-தோணியிற்றொழில்செய்பவர். சாலர்-வலைவீசுந்தொழிலுடையவர். கடலர்-கடலிற்றொழில் செய்பவர். கழியர்-கழிநிலத்துச் சஞ்சரிப்போர். நெய்தனிலப்பெண்பெயர்—பரத்தி, நுளைச்சி, அளத்தி, கடற்பிணா. எ-று. (எக)

செய்யுள்.

கொண்கனே துறைவனேநெகுறித்தமெல்லன்புலம்பன்
தண்கடற்சேர்ப்பனெய்தற்றலைவனைச்சாற்றுநாமம்
பண்படுமளவர்தாமேபகர்ந்திடுநெங்நிலத்தில்
உண்படுமுப்பமைப்போருமணருவிதித்தபேரே.

சொற்பொருள்.

நெய்தனிற்றலைவன்பெயர்—கொண்கன், துறைவன் - கடற்றுறையிற்சஞ்சரிப்போன். மெல்லன்-மெல்லிய கழிநிலமுடையவன். புலம்பன், கடற்சேர்ப்பன்-கடற்கரையில் வசிப்போன். உப்பமைப்போர்பெயர்—அளவர் - உப்பளத்திற்றொழில்செய்வோர். உமணர்-உமண்சாதியிலுள்ளவர். எ-று. (எஉ)

செய்யுள்.

அணியினிற்பண்பிலுற்றவுவமையின்மகடூஉவாடூஉத்
தணிவின்முன்னிலைப்பேர்வேறுசாற்றியதோற்றமாக

உணருமைந்திணைப்பாற்பட்டகருப்பொருளுரைத்தாமிப்பாற்
கணிதமின்முறைப்பேர்காட்டிக்காயத்தின்பெயருஞ்சொல்வாம்.

இச்செய்யுளினால் இன்ன இன்ன பெயர் கூறினும் என்றும் இனி இன்ன இன்ன பெயர் கூறுவாம் என்றுங் கூறினர். (எக)

செய்யுள்.

தாதைதன்றாதையேமூதாதையேபாட்டனுமம்
பேதமொன்றில்லாமற்றும்பிதாமகனென்றுமாகுந்
தாதையேயப்பனையன்றந்தையேயம்மானத்தன்
ஏதமில்பிதாவென்றேழுமீன்றவனுமாமே.

சொற்பொருள்.

பாட்டன்பெயர்—தாதைதன்றாதை-பிதாவுடைய பிதா. மூதாதை-மூத்தபிதா. பிதாமகன்-பிதாவுடையபிதா. ஈன்றவன்பெயர்—தாதை-குலத்தைப் பெருக்குவோன். அப்பன், ஐயன்-வணங்கப்படத் தக்கவன். தந்தை-தமக்கு இன்னன் என உயர்த்தப்படுவோன். அம்மான்-பெரியவன். அத்தன்-பொருளுடையவன். பிதா-காப்பவன். எ-று. (எச)

செய்யுள்.

அவ்வையம்மனைபயந்தாளம்மையேயாயேயன்னை
எவ்வமிலாயிமோய்தாயீன்றவளுமாமொன்பான்
செவ்விதின்வளர்த்ததாதிசெவிலிகோடாய்கைத்தாயாந்
தவ்வைமுன்பிறந்தாள்சேட்டைதங்கையேபின்னைதானே.

சொற்பொருள்.

ஈன்றவள்பெயர்—அவ்வை, அம்மனை, பயந்தாள், அம்மை, யாய், அன்னை, ஆயி-பூசிக்கத்தக்கவள். மோய், தாய். வளர்த்ததாதியின்பெயர்—செவிலி, கோடாய், கைத்தாய். முன்பிறந்தாள்பெயர்—தவ்வை, சேட்டை. தங்கையின்பெயர்—பின்னை. எ-று. (எரு)

செய்யுள்.

ஞாதியர்தாயத்தாரேநாட்டுந்தங்குடியிற்சுற்றம்
மாதுலனம்மான்மாமன்சகலனோர்குடியிற்கொண்டோன்
மூதுணர்சேட்டன்றம்முன்முன்னவனண்ணன்மூத்தோன்
பேதமிலிளவல்பின்னேயநுசன்கனிட்டன்பின்னோன்.

சொற்பொருள்.

தங்குடிச்சுற்றத்தின்பெயர்—ஞாதியர்-தம்மவரென்றறியப்படுபவர். தாயத்தார்-உரிமைபெறுபவர். மாமன்பெயர்—மாதுலன்-மாதாவுடன்பிறந்தவன். அம்மான்-பெரியவன். ஓர்குடியிற்கொண்டோன்பெயர்—சகலன்-மனைவியின்சகோதரிக்கு நாயகன். மூத்தோன்பெயர்—சேட்டன் - மூப்புடையவன். தம்முன், முன்னவன்-முன்பிறந்தவன். அண்ணன்-மேன்மையுடையவன். பின்னோன் பெயர்-இளவல்-இளமையுடையவன். பின்-பின்பிறந்தோன். அநுசன்-பின்பிறந்தோன். கனிட்டன்-வயசிற்குறைந்தவன். எ-று. (எசு)

### செய்யுள்.

கணவனேகொழுநன்வேட்டோன்கண்டன்வல்லவனேபத்தா
துணைவனேதலைவன்கொண்கன்சூழ்ந்திடுந்தவனேகாந்தன்
மணமகனுரியோனன்பன்மணவாளன்பதியேகேள்வன்
அணையுங்காதலன்பேர்பன்னேழன்றிநாயகனுமாமே.

### சொற்பொருள்.

காதலன்பெயர்—காதலன்-விரும்பப்படுபவன். கணவன், கொழுநன், வேட்டோன்-விவாகஞ்செய்தவன். கண்டன், வல்லவன்-பிரியமுள்ளவன். பத்தா-குடும்பத்தைப் பேணுபவன். துணைவன்-துணையாயுள்ளவன் தலைவன்-தலைமையுடையவன். கொண்கன், தவன்-மனைவியை நடுங்கச் செய்வோன். காந்தன்-விரும்பப்படுவோன். மணமகன்-விவாகமுடைய புருடன். உரியோன்-குடும்பத்திற்குரியவன். அன்பன்-அன்புடையோன். மணவாளன் - விவாகமுடையவன். பதி-குடும்பத்தைக் காப்பவன். கேள்வன்-உறவுடையவன். நாயகன் - குடும்பத்தை நடத்துவோன். எ-று. (எஎ)

### செய்யுள்.

இல்லவளுரிமைபன்னிகுடும்பினியில்லேயில்லாள்
வல்லவைகளமேதாரமனையாட்டிமனைவிருந்தஞ்
சொல்லியபாரிவாழ்க்கைத்துணைகளத்திரமேகாந்தை
நல்லகாதலிவிரும்புநாயகிதேவிநாமம்.

### சொற்பொருள்.

தேவிபெயர்—தேவி-கிரீடைக்குரியவள். இல்லவள்-மனைக்குரியவள். உரிமை - நாயகனுக்குரியவள். பன்னி-நாயகனையுடையவள். குடும்பினி - குடும்பத்தலைவி. இல்-இல்லமுடையவள். இல்லாள்-மனையுடையவள். வல்லவை-பிரியமுள்ளவள். களம்-மென்மையுடையவள். தாரம்-நாயகன் பயப்படச்செய்பவள். மனையாட்டி-மனையுடையவள். மனை-இல்லமுடையவள். விருந்தம்-மகிழ்விப்பவள். பாரி-குடும்பத்தை வளர்ப்பவள். வாழ்க்கைத்துணை-வாழ்வுக்குத் துணையாயுள்ளவள். களத்திரம் - மென்மையுடையவள். காந்தை - விரும்பப்படுபவள். காதலி-விரும்பப்படுபவள். நாயகி-குடும்பத்தை நடத்துபவள். எ-று. (எஅ)

### செய்யுள்.

சந்ததியதலைசூனுத்தநயன்காதலனேமெய்யன்
ந்தனன்சிறுவன்றோன்றல்குட்டனேநாட்டுஞ்செம்மல்
ந்தியமருமான்பிள்ளைமுளைசுதன்புதல்வன்புத்திரன்
மைந்தன்கால்பொருள்சேயெச்சம்வழிபிறங்கடைமகன்பேர்.

### சொற்பொருள்.

மகன்பெயர்—சந்ததி-குலத்தை வளர்ப்போன். மதலை, சூனு-பிறப்பிக்கப்பட்டவன். தநயன் - குலத்தை வளர்ப்பவன். காதலன் - விரும்பப்படுவோன். மெய்யன் - சரீரசம்பந்தமுடையவன். நந்தனன் - பெற்றோரை மகிழ்விப்போன். சிறுவன்-சிறுமையுடையவன். தோன்றல்-தோற்றமுடையவன். குட்டன்-சிறுமையுடையவன். செம்மல் - செம்மையுடையவன். மருமான், பிள்ளை, முளை,

சுதன்-பிறப்பிக்கப்பட்டவன். புதல்வன், புத்திரன் - புத்தென்னும் நரகிற் செல்லாது பிதாவைக் காப்போன். மைந்தன்-வலிமையுடையவன். கால்-[illegible]திற்கு அடியாயுள்ளவன். பொருள்-செல்வம்போன்றவன். சேய்-செம்மையுடையவன். எச்சம் - எஞ்சிநிற்பவன். வழி-வமிசத்திற்கு வழியாக நிற்பவன். பிறங்கடை-உயர்வடைபவன். எ-று. (௩௯)

செய்யுள்.

சிறுவிபுத்திரியிரேுடுசிறந்திடுந்தயையையை
யறுவில்பந்தனைமதிப்பாமகள்சுதைபுதல்வியேழ்பேர்
இறையாகுமெச்சந்தானிவ்விருப்பாற்குமேற்குமென்ப
குறுமக்கண்மகார்சிறூரேகூறுபவிவர்தம்பன்மை.

சொற்பொருள்.

புதல்விபெயர்—சிறுவி, புத்திரி, தநயை, ஐயை - பூசிக்கத்தக்கவள். பந்தனை-கட்டுப்பாடுடையவள். மகள், சுதை-பிறப்பிக்கப்பட்டவள். மகன் மகள் என்னும் இருபாற்கும் பொதுப்பெயர்—எச்சம். பிள்ளைப்பன்மையின்பெயர்—குறுமக்கள்-சிறுபிள்ளைகள். மகார்-இளமையுடையவர். சிறூர்-சிறுமையுடையவர். எ-று. (௪0)

செய்யுள்.

தானையேபதாதிவெய்யதந்திரந்தளமேதண்டம்
வானியேககநம்யூகம்வாகிநியநீகம்பாடி
சேனையேகவநங்கூடிச்செறிபலம்பரிகலந்தான்
ஊனமில்படைமூவைந்தாமுறுபதாகினியுமப்பேர்.

சொற்பொருள்.

படையின்பெயர்—படை-போரில்விருப்புடையது. தானை, பதாதி-காலாற் செல்வது. தந்திரம், தளம், தண்டம்-போர்பயிற்றப்படுவது. வானி, ககநம், யூகம்- போர்செய்வது. வாகிநி - குதிரை முதலிய கூட்டமுடையது. அநீகம், பாடி, சேனை, கவநம், பலம், பரிகலம், பதாகினி-காலாற்செல்வது. எ-று. (௪௧)

செய்யுள்.

அணியுண்டையொட்டேயூகமாயவைபடைவகுப்பாம்
அணிநெற்றிகையேதூசியபெடையுறுப்பின்பேராம்
அணிபின்னிற்கூழையாந்தார்கொடிப்படையாகுமென்ப
பணியக்கீழறுதலோடேயறைபோதல்படையறற்பேர்.

சொற்பிரிவு.

படைவகுப்பின்பெயர்—அணி, உண்டை, ஒட்டு, யூகம். படையுறுப்பின் பெயர்—அணி, நெற்றி, கை, தூசி. பின்னணியின்பெயர்—கூழை. கொடிப்படையின்பெயர்—தார். படையறற்பெயர்—கீழறுதல், அறைபோதல். எ-று.

செய்யுள்.

மக்களேநரரேமாக்கண்மாநவர்மாந்தர்மண்ணோர்
தக்கவாண்டையரேமைந்தர்சாற்றியமநுடரின்பங்

தொக்கமாநுடரீரைந்துஞ்சொல்லியமனிதர்பேராம்
மக்கடம்பரப்பிற்குப்பேர்மன்பதைபைஞ்ஞீலென்ப.

சொற்பொருள்.

மனிதர்பெயர்—மனிதர்-மநுவின் பிள்ளைகள். மக்கள், நரர்-எல்லாவற்றையும் செப்படுத்துதலுடையவர். மாக்கள், மாநவர்-மநுவின் பிள்ளைகள். மாந்தர்-மநுவின் பிள்ளைகள். மண்ணோர்-மண்ணுலகில் வசிப்பவர். ஆண்டையர்-ஆளுந்தன்மையுடையவர். மைந்தர்-வலிமையுடையவர். மநுடர்-மநுவின் பிள்ளைகள். மாநுடர்-மநுவின்பிள்ளைகள். மக்கட்பரப்பின்பெயர்—மன்பதை, பைஞ்ஞீல். ()

செய்யுள்.

உடலுறுப்பங்கம்யாக்கையுயிர்நிலைதேகங்காயஞ்
சடலமேமூர்த்தமெய்யேதாவரந்தனுவாதாரங்
கடமொடுபுதைபுணர்ப்புக்காத்திரம்பூட்சியாகம்
புடைகொள்பூதிகஞ்சரீரம்புற்கலமுடம்பின்பேரே.

சொற்பொருள்.

உடம்பின்பெயர்—உடல், உறுப்பு-மேன்மையுடையது. அங்கம்-போதலுடையது. யாக்கை-தோல் முதலியவைகளால் யாக்கப்படுவது. உயிர்நிலை-உயிர் நிற்றலுடையது. தேகம்-அன்னாதிகளால் வளர்தலுடையது. காயம்-அவயவங்களாற் சேர்க்கப்பட்டது. சடலம்-அறிவில்லாதது. மூர்த்தம்-மயக்கஞ்செய்விப்பது. மெய், தாவரம்-இயங்காமையுடையது. தனு-உணவினால் விசாலிப்பது. ஆதாரம்-உயிர்க்காதாரமாயுள்ளது. கடம்-சீலையான் மூடப்படுவது. புதை, புணர்ப்பு-அவயவங்களாற் புணர்க்கப்படுவது. காத்திரம்-போதலுடையது. பூட்சி-பூணுதலுடையது. ஆகம்-வளர்தலுடையது. பூதிகம்-மண் முதலிய பூதங்களாலாயது. சரீரம்-அழியுந்தன்மையுடையது. புற்கலம்-மேன்மையுடையது. எ-று. (அச)

செய்யுள்.

வடிவமோடுருவமேனிசட்டகம்வடிவின்பேராங்
கடியுநீள்பிரேதம்வேறுகாட்டியசவம்பிணப்பேர்
அடையுமற்றப்பேர்தானேகளேவரமழனமென்றும்
உடலினிற்குறைகவந்தமட்டையூபமுமுரைக்கும்.

சொற்பொருள்.

வடிவின்பெயர்—வடிவம், உருவம், மேனி, சட்டகம். பிணத்தின்பெயர்—பிரேதம்-முடிவடைந்தது. சவம்-சீவனீங்கினது. களேவரம்-ஆதரிக்கப்படுவது. அழனம்-சுடப்படுவது. உடற்குறையின்பெயர்—கவந்தம்-சிரசில்லாதது. மட்டை, யூபம்-யாகத் தூண்போல்வது. (அரு)

செய்யுள்.

சரணமேபதமேமற்றைத்தாளொடங்கிரியேபாதங்
கருதியசலனமற்றைக்கழலுடனடியுங்காலாம்
பரடென்பகரட்டிணும்பற்றியகணைக்கால்சங்கம்
தருமுழந்தாண்முழந்துசானுவுமதன்பேர்தானே.

## சொற்பொருள்.

காலின்பெயர்—கால்-உடம்பிலே காற்பங்கான உறுப்பு. சரணம்-போதற்குக் காரணமானது. பதம்-போதற்குக் காரணமானது. தாள்-முயற்சிக்குக் காரணமானது. அங்கிரி-போதற்கருவி. பாதம்-போதற்கருவி. சலனம்-போதற்கருவி. கழல்-சத்திசெய்யப்படுவது. அடி-நிலத்திலடுத்தலுடையது. கரட்டின்பெயர்—பரடு. கணைக்காலின்பெயர்—கணைக்கால்-திரண்டகால். சங்கம்-செனித்தலுடையது. முழந்தாளின்பெயர்—முழந்தாள்-முழம் என்னும் அளவுடையகால். முழந்து-முழம் என்னும் அளவுடையது. சானு-தொடைக்குங் கணைக்காலுக்கும் நடுவுள்ளது. எ-று. (அசு)

## செய்யுள்.

நெடியவூருக்குறங்குநீள்வாமங்கவான்றொடைப்பேர்
கடிதடநிதம்பமென்பகவின்றிகழல்குலின்பேர்
நடுநுசுப்பொடுமேருங்குநாட்டுமத்திமமேயுக்கம்
இடையின்பேர்மருங்கின்பக்கமொக்கலையென்பதாமே.

## சொற்பொருள்.

தொடையின்பெயர்—தொடை-தொடுக்கப்பட்டிருப்பது. ஊரு-சீலையான் மறைக்கப்படுவது. குறங்கு, வாமம்-அழகுடையது. கவான். அல்குலின்பெயர்—கடிதடம்-சீலையன் மூடப்படுவது. நிதம்பம்-மெலிதலுடையது. இடையின்பெயர்—நடு-சரீரத்தினடுவிலுள்ளது. நுசுப்பு, மருங்கு மத்திமம்-மெலிவுடையது. உக்கம். மருங்கின்பக்கத்தின்பெயர்—ஒக்கலை. எ-று. (அஎ)

## செய்யுள்.

உதரமோடகடுகுக்கியுடன்பண்டிவயிற்றின்பேராந்
திதலையேபொறியேதுத்திதேமலாஞ்சுணங்குமாமே
இதலையேயுந்திநாபியிலஞ்சியேபோகில்கொப்பூழ்
புந்தியவாண்குறியேகோசம்பூப்பகம்பெண்ணின்சின்னம்.

## சொற்பொருள்.

வயிற்றின்பெயர்—உதரம்-கருப்பம் பிரகாசித்தலுடையது. மோடு-பெருமையுடையது. அகடு-உட்பக்கத்திலிருப்பது. குக்கி-மலத்தை வெளியில் விடுவது. பண்டி-பண்டங்கொள்வது. தேமலின்பெயர்—திதலை, பொறி துத்தி, சுணங்கு. கொப்பூழின்பெயர்—இதலை, உந்தி-நீர்ச்சுழிபோல்வது. நாபி-கட்டப்படுவது. இலஞ்சி, போகில். ஆண்குறியின்பெயர்—கோசம். பெண்குறியின்பெயர்-பகம்-அடையப்படுவது. எ-று. (அஅ)

## செய்யுள்.

அகலமேமருமநெஞ்சேயாகமேயுரமேமார்பாம்
நகிலமேகொம்மைகொங்கைநறுங்குயந்தனங்குருக்கண்
பகர்பயோதரஞ்சுவர்க்கம்பறம்பிவைமுலையின்பல்பேர்
திகழ்முலைக்கண்ணினுமஞ்சிலீமுகஞ்சூசுகங்கள்.

சொற்பொருள்.

மார்பின்பெயர்—அகலம்-விசாலமுடையது. மருமம்-இரகசியம்அடக்கிவைக்கப்படுவது. நெஞ்சு, ஆகம்-அகத்திலுள்ளது. உரம் - முன்செல்வது. முலையின்பெயர்—நகிலம், கொங்கை-திரட்சியுடையது. கொங்கை-பரிமளம் பொருந்துவது. குயம்-நகக்குறிபெறுவது. தனம்-குழந்தைகளாற் பாலுண்ணப்படுவது. குருக்கண்-பாரமுடையது. பயோதரம்-பாலைத்தரிப்பது. சுவர்க்கம்-விரும்பத்தக்கது. பறம்பு-மலையையொப்பது. முலைக்கண்ணின்பெயர்—சிலீமுகம் - கூரிய நுதியுடையது. சூசுகம்-குழந்தைகளாற் பால்குடிக்கப்படுவது. எ-று. (அ௯)

செய்யுள்.

கரமத்தம்பாணிதோளேகைத்தலநாற்பேராங்கூர்ப்
பரமுழங்கைகிலுத்தம்பணித்திடுமணிக்கட்டென்ப
உரவியவங்கையங்கைகுடங்கையேயுள்ளங்கைப்பேர்
விரல்களங்குலியென்றாகுமிகுமுகிர்நகமதாமே.

சொற்பொருள்.

கைத்தலத்தின்பெயர்—கரம்-தொழில்செய்தலுடையது. அத்தம்-முழமிடுதலுடையது. பாணி, தோள்-அடித்தலுடையது. முழங்கையின்பெயர்—கூர்ப்பரம்-பொருளை இழுக்கும்போது சற்றே தொனிப்பது. மணிக்கட்டின்பெயர்—மணிக்கட்டு-ஆபரணங்கட்டப்படுவது. கிலுத்தம். உள்ளங்கையின்பெயர்—அகங்கை-கையினுட்புறம். அங்கை-அகங்கை. குடங்கை - வளைவுடையது. விரலின்பெயர்—விரல் - ஒன்றோடொன்று விரவுதலுடையது. அங்குலி - ஒன்றோடொன்று பொருந்துதலுடையது. நகத்தின்பெயர்—நகம் - பரிசமறியாதது. உகிர்-விழுதலுடையது. எ-று.

நச்சினார்க்கினியர் கிலுத்தம் என்பது முன்கைச்சந்து எனவும், கூர்ப்பரம் என்பது முழங்கைக்கு முன் எனவுங் கூறுவர். (௯0)

செய்யுள்.

விறன்மிகுபுயமுமொய்ம்புமேவியவாகுவுந்தோள்
கறையில்கந்தரங்கிரீவங்களங்கண்டங்கழுத்தினமம்
புறம்வெரிநபரம்வெந்நேபோற்றியமுதுகுநாற்பேர்
சிறுபுறங்கயிலெருத்தஞ்சுவல்பிடர்நிகலந்தோண்மேல்.

சொற்பொருள்.

தோளின்பெயர்—புயம், மொய்ம்பு-வலிமையுடையது. வாகு - முயற்சியுடையது. கழுத்தின்பெயர்—கந்தரம்-தலையைத் தரித்திருப்பது. கிரீவம் - உண்ணற்குக் காரணமாயுள்ளது. களம்-விழுங்குதற்கருவி. கண்டம் - தொனித்தலுடையது. முதுகின்பெயர்—புறம்-புறத்திலுள்ளது. வெரிந், அபரம்-பின்னுள்ளது. வெந். பிடரின்பெயர்—சிறுபுறம், கயில், எருத்தம், சுவல். தோண்மேலின்பெயர்—நிகலம். எ-று.

மிளிர் கோகு வாகுவுந்தோள் எனவும் பாடம். (௯௧)

செய்யுள்.

வதனமானனமேதுண்டம்வத்திரமுகமென்றாகும்
இதழுடனதரமேபாலிகைமுத்தமென்றும்பேராம்

உதடதேயோட்டமாங்கீழுதட்டின்பேரதரமென்றும்
விதமுறுமெயிறுதந்தமேவியதசநம்பல்லே.

சொற்பொருள்.

முகத்தின்பெயர்—முகம்-உணவினைற் பிடிக்கப்படுவது. வதனம்-பேசுதற்கருவி. ஆனனம்-சீவித்தற்குக் காரணமானது. துண்டம்-உணவினைற் பிடிக்கப்படுவது. வத்திரம்-பேசுதற்கருவி. உதட்டின்பெயர்— இதழ்-பூவிதழ் போல்வது. அதரம், பாலிகை, முத்தம்-விடப்படுவது. மேலுதட்டின்பெயர்—ஓட்டம்-உட்டணத்தாற் சூடடைவது. கீழுதட்டின்பெயர்—அதரம்-கீழுள்ளது. பல்லின்பெயர்— எயிறு, தந்தம் - உணவுகளையுண்பது. தசநம் - கடித்தலுடையது. எ-று. (௩௨)

செய்யுள்.

பன்னியமுறுவன்மூரல்பல்லுமாநகையுமாகும்
முன்னியதாடிகட்டஞ்சிவுகமோவாயின்பேராம்
மன்னுநாசிகுவைதாரையற்றைத்தாலுவுநாக்காகுங்
கன்னமேயள்ளுக்கேள்விகாதின்பேர்செவியுமாமே.

சொற்பொருள்.

இன்னும் பல்லின்பெயர்—முறுவல், மூரல், நகை. மோவாயின்பெயர்—தாடி-வளைவுடையது. கட்டம், சிவுகம் - தசையாலாக்கப்பட்டது. நாக்கின்பெயர்—நாக்கு-மேல்வாய்க்குங் கீழ்வாய்க்கும் நடுவிருப்பது. நா-நடுவுள்ளது. சிகுவை-இனியபொருளை விரும்புவது. தாரை, தாலு. காதின்பெயர்—கன்னம்-ஒலியைக்கிரகித்தலுடையது. அள்-கூர்மையுடையது. கேள்வி-கேட்டற்கருவி. செவி. எ-று. (௩௩)

செய்யுள்.

அணன்மிடறுகுமற்றையண்ணமேயுண்ணாக்கின்பேர்
அணரியேயணலேயண்ணமானமேல்வாய்ப்புறப்பேர்
குணமுறுகவுள்கபோலங்கொடிறநுக்கதுப்பின்கூற்றுந்
துணைசெயாக்கிராணங்கோணந்துண்டமேநாசிமூக்காம்.

சொற்பொருள்.

மிடற்றின்பெயர்—அணல். உண்ணாக்கின்பெயர்—அண்ணம். மேல்வாய்ப்புறத்தின்பெயர்—அணரி, அணல். அண்ணம் - மேலுள்ளது. கதுப்பின்பெயர்—கவுள். கபோலம்-உண்ணும்போது அசைதலுடையது. கொடிறு, அநு. மூக்கின்பெயர்—ஆக்கிராணம் - மணங்கிரகித்தற்குக் காரணமானது. கோணம்-மணத்தாற் பிரமிப்பது. துண்டம்-மணத்தைக் கிரகிப்பது. நாசி-ஒலிசெய்வது. எ-று. (௩௪)

செய்யுள்.

நயனநேத்திரமேயக்கநாட்டங்கோநோக்கஞ்சக்கு
வியனுறும்பார்வைதாரைவிலோசநம்விழியேயக்கி
செயமுறுதிருக்குத்திட்டிதிருட்டியம்பகமேகண்ணும்
மயமுறுதாரைகண்ணின்மணிவிளிம்பிமையினமம்.

### சொற்பொருள்.

கண்ணின்பெயர்—நயனம் - வழியையடைவித்தலுடையது. நேத்திரம் - வழியையடைவித்தலுடையது. அக்கம் - எங்கும்போய் வியாபித்தலுடையது. நாட்டம் - நாடுதலுடையது. கோ - எங்கும்போய் வியாபித்தலுடையது. நோக்கம் - பார்த்தற்கருவி. சக்கு - பொருள்களைக் காட்டுவது. பார்வை - பார்த்தற்கருவி. தாரை - இருளைக்கடப்பது. விலோசநம் - பார்த்தற்கருவி. விழி, அக்ஷி - எங்கும் போய் வியாபித்தலுடையது. திருக்கு - பார்த்தற்கருவி. திட்டி - திருட்டி. திருட்டி - பார்த்தற்கருவி. அம்பகம் - எங்கும்போய் வியாபித்தலுடையது. கண்மணியின்பெயர்—தாரை. கண்ணிமையின்பெயர்—விளிம்பு. எ-று. [illegible]

### செய்யுள்.

பிருகுடி நுதலேநீண்ட பிருவேவபுருரம்பூருப்
புருவமாம்புகுடியும்பேர்புடைபடுநிடலத்தோடு
திருநுதல்குளமிலாடஞ்சேர்ந்தமத்தகமேநெற்றி
மருவியபாலமுண்டமளிகமும்வகுக்கலாமே.

### சொற்பொருள்.

புருவத்தின்பெயர்—புருவம் - மேலே போதலுடையது. பிருகுடி - அசைவுடையது. நுதல், பிரு - அசைவுடையது. புருரம் - அசைவுடையது. பூரு - அசைவுடையது. புகுடி - அசைவுடையது. நெற்றியின்பெயர்—நிடலம் - முற்பக்கத்திலுள்ளது. நுதல், குளம் - வளைவுள்ளது. இலாடம் - தலையின்மயிர் வரம்பெறுவது. மத்தகம் - கடினமுடையது. பாலம் - பிரகாசமுடையது. முண்டம் - மயிரில்லாதது. அளிகம் - அலங்கரிக்கப்படுவது. எ-று. (௯௯)

### செய்யுள்.

உரவியதலையேமூர்த்தமுவ்வியோடுத்தமாங்கஞ்
சிரமுடிசென்னிமுண்டஞ்சிகரமத்தகமுமாகுந்
திருமுடிசிமிலிசிக்கஞ்சிகையிவைகுடுமிநாற்பேர்
விரவியசுடிகைசூழிமேவியநவிரமுச்சி.

### சொற்பொருள்.

தலையின்பெயர்—தலை - பெருமையுடையது. மூர்த்தம் - மோகமடைவது. உவ்வி, உத்தமாங்கம் - உத்தமமான உறுப்பு. சிரம் - நரையாற் பீடிக்கப்படுவது. முடி - உடலினிறுதியிலுள்ளது. சென்னி, முண்டம் - மயிர்களையப்படுவது. சிகரம், மத்தகம். குடுமியின்பெயர்—முடி, சிமிலி, சிக்கம், சிகை. உச்சியின்பெயர்—சுடிகை - மூடப்படுவது. சூழி - மூடப்படுவது. நவிரம். எ-று. [illegible]

### செய்யுள்.

உளைநவிர்குடுமிபித்தையோரியேகுழல்கார்குஞ்சி
தளைசிகைதொங்கல்பங்கிதானீராறுண்மயிர்ப்பேர்
வளர்குழல்கதுப்புக்கேசமருவியசுரியனுன்கும்
இளையபைந்தார்க்குமற்றையிளங்கொடியார்க்குமேற்கும்.

### சொற்பொருள்.

ஆண்மயிரின்பெயர்—உளை, நவிர், குடுமி, பித்தை, ஓரி, குழல், கார் - கருமையுடையது. குஞ்சி - நெறிப்புடையது. தளை - கட்டப்படுவது. சிகை - தலையில் இடப்பது. தொங்கல் - தொங்குந் தன்மையது. பங்கி - பங்கமடைவது. ஆண்மயிர்க்கும் பெண்மயிர்க்கும்பெயர்—குழல், கதுப்பு, கேசம், சுரியல். எ-று. [illegible]

செய்யுள்.

குருள்குழல்விலோதமோதிகூழைகுந்தளமராட்டங்
குரலைம்பாலளகம்பத்துமபெண்மயிர்கூந்தலும்பேர்
பெருகியகொப்புமுச்சிபின்னகங்கொண்டைபந்தந்
திருமிகுதம்மில்லம்பொற்சிகழிகைமயிர்முடிப்பேர்.

சொற்பொருள்.

பெண்மயிரின்பெயர்—குருள் - பாரமுடையது. குழல், விலோதம், ஓதி, கூழை, குந்தளம், மராட்டம், குரல், ஐம்பால்-கொண்டை, குழல், பனிச்சை, முடி, சுருள் என்னும் ஐந்துவகையாக முடிக்கப்படுவது. அளகம் - அலங்கரிக்கப்படுவது. கூந்தல், மயிர்முடியின்பெயர்—கொப்பு, முச்சி, பின்னகம், கொண்டை. பந்தம்-கட்டப்படுவது. தம்மில்லம்-கட்டப்படுவது. சிகழிகை. எ-று.

ஐம்பால் என்பதற்கு இருட்சி, சுருட்சி, நீட்சி, குளிர்ச்சி, அழகு என்னும் ஐம்பகுதியது என்பாருமுளர். (௯௯)

செய்யுள்.

ஓரியேகேசம்பங்கியுனையுரோமம்மராட்டம்
நேருமிப்பேர்களாறும்பிறமயிர்சிகழ்த்துமென்ப
சேருமவ்வுரோமமற்றைச்சிரோந்தமுஞ்செறிமயிர்ப்பேர்
வாருங்குந்தளம்விலோதமயிர்க்குழற்சிப்பேர்வைக்கும்.

சொற்பொருள்.

பிறர்மயிரின்பெயர்—ஓரி, கேசம் - தலையிற்கிடப்பது. பங்கி - பங்கமுடையது. உனை, உரோமம்-முளைத்தலுடையது. மராட்டம், செறிமயிரின்பெயர்—உரோமம், சிரோந்தம். மயிர்க்குழற்சியின்பெயர்—குந்தளம், விலோதம் எ-று.

செறிமயிர் என்பதற்கு உடம்பிற் பரந்த மயிரென்பாருமுளர். (௧௦௦)

செய்யுள்.

குடிலமேவேணிநீண்டகோடீரம்பின்னலோடு
சடிலமென்றைந்துபேருஞ்சடையெனவடைவேசாற்றும்
நெடியகாத்திரமுறுப்புநீளங்கமவயவப்பேர்
கடிபமூட்டுங்கொளுத்துங்கந்துஞ்சந்தாகுமன்றே.

சொற்பொருள்.

சடையின்பெயர்—சடை-ஒன்றோடொன்று நெருங்கியிருப்பது. குடிலம் - வளைதலுடையது. வேணி-கூடியிருப்பது. கோடீரம் - வளைதலுடையது. பின்னல் - பின்னுதலுடையது. சடிலம்-நெருங்கியிருப்பது. அவயவத்தின்பெயர்—சேர்ந்திருத்தலுடையது. காத்திரம்-போதலுடையது. உறுப்பு - உடம்பிலுறுதலுடையது. அங்கம்-போதலுடையது. சந்தின்பெயர்—சந்து - பொருந்தப்படுவது. மூட்டு-பொருத்தப்படுவது. கொளுத்து-பொருத்தப்படுவது. கந்து-இணைக்கப்படுவது. எ-று. (௧௦௧)

செய்யுள்.

சிரையேசங்கரநாடி திருந்தியசரம்புமுப்பேர்
அரலையேகழலைகோணமுழையொடுகாசமாகும்
மருவுமங்கிதமேசேக்கைவடிவுடற்றழும்பாம்
தருபொறிவரையிறைப்பேர் சரைநரைபலிதமுப்பேர்.

சொற்பொருள்.

நரம்பின்பெயர்—சிரை, சங்கநம் - அவயவத்திற் சேர்ந்திருப்பது. நாடி-உள்ளே துளையுடையது. கழலையின்பெயர்—அரலை. கோழையின்பெயர்—கோழை - கொழுமையுடையது. ஐ, காசம். உடற்றழும்பின்பெயர்—அங்கிதம்-அடையாளமாக்கப்பட்டது. சேக்கை, வசி, வடு. இறையின்பெயர்—பொறி-எழுத்துப்போல்வது. வரை - எழுத்துப்போல்வது. நரையின்பெயர்—நரை - வெண்மையுடையது. சரை-உடம்பின் முதிர்ச்சியைக் காட்டுவது. பலிதம்-அழகைக் கெடுப்பது. எ-று. (௧0௨)

செய்யுள்.

அழிதலையோட்டினுமங்கபாலமேயத்தியென்பு
கழிவுறுமெலும்பினுமங்களேவரமென்றுங்காட்டும்
கழியுடன்முழுவெலும்புகங்காளமென்பர்நுலோர்
விழைபொறிகரணங்கந்தமேவுமிந்திரியமுப்பேர்.

சொற்பொருள்.

தலையோட்டின்பெயர்—கபாலம் - தலையைக் காப்பது. எலும்பின்பெயர்—அத்தி-எறியப்படுவது என்பு. களேவரம்-உடம்பிலே விசேடமுடையது. கழியுடலின் முழுவெலும்பின்பெயர்—கங்காளம்-நீரைப் போக்குதலுடையது. இந்திரியத்தின்பெயர்—இந்திரியம் - ஆன்மசம்பந்தமுடையது. பொறி, கரணம்-செய்கைக்குக் கருவியானது. கந்தம். எ-று. (௧0௩)

செய்யுள்.

தருசுவையொளியூறோசைசாற்றியநாற்றமோருங்
கருவிநாக்கண்ணேமெய்யேகாதொடுமூக்குமாகுந்
தெரிதருமுயிரேயாதன்சேதனன்பசுவேசீவன்
அரியபுற்கலனேகூத்தனணுவியமானனான்மா.

சொற்பொருள்.

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பவைகளை முறையே, அறியுங்கருவிகளின்பெயர்கள்—நாக்கு, கண், சரீரம், காது, மூக்கு என்பன. உயிரின்பெயர்—உயிர்-உயிர்த்தலுடையது. ஆதன்-போதலுடையது. சேதனன்-அறிவுடையது. பசு-பாசத்தாற் பீடிக்கப்படுவது. சீவன் - சீவித்தலுடையது. புற்கலன்-மேன்மையுடையது. கூத்தன்-கூத்தன்போல்வது. அணு-நுண்மையுடையது. இயமானன்-தலைமையுடையது. ஆன்மா - எங்கும் வியாபித்தலுடையது. எ-று. (௧0௪)

செய்யுட்டொகை.

இருபதோடிருபான்முப்பானிருபானீரைந்துமேலும்
மருவியவாறுசெய்யுண்மக்கடம்பெயர்க்குச்செய்தான்
குருநறுங்குன்றைவேந்தன்குணபத்திரன்றந்தநோன்மை
தருநெறிநோற்கும்வீரைதழைத்தமண்டலவன்றானே. (௧0௫)

முற்றிற்று.



உ

# விக்கிரய புத்தக விஞ்ஞாபநம்.



| | | ரூ. | சத. |
|---|---|---|---|
| ௧. | தொல். எழுத்ததிகாரம். நச்சினார்க்கினியம் ... ... ... ... | ௧. | ௫௦ |
| ௨. | ,, சொல்லதிகாரம். நச்சினார்க்கினியம் ... ... ... ... | ௧. | ௫௦ |
| ௩. | கலித்தொகையுரை. நச்சினார்க்கினியம் ... ... ... ... ... | ௩. | ௫௦ |
| ௪. | சூளாமணி. (சமணகாவியம்.) ... ... ... ... ... ... | ௧. | ௫௦ |
| ௫. | சூடாமணி நிகண்டு. ௧௨. தொகுதியும் ... ... ... ... ... | ௧. | ௦௦ |
| ௬. | நீதோபதேசம். இது பஞ்சதந்திரத்திலும் பல நூல்களிலுமிருந்து திரட்டப்பட்ட நீதிவாக்கியங்களையும் அவற்றிற் கிசைந்த விநோதமான கதைகளையு முடையது... ... ... ... ... | | ௫௦ |
| ௭. | யாப்பருங்கலக்காரிகையுரை. யாவரும் எளிதில் உணரும்படி விடயங்களைப் பிரித்தும், அநாவசியகமான சிலவற்றை விலக்கியும், ஆவசியகமான சிலவற்றைக் கூட்டியும், பலவாறு புதுக்கி விளக்கியது... ... ... ... ... ... ... ... | | ௫௦ |
| ௮. | இலக்கணசந்திரிகை. நன்னூல் முதலிய இலக்கணங்களிலே அமையாது பாரதம் இராமாயணம் முதலியவைகளிலே வரும் பலவித சொற்பிரயோகங்களுக்கு இலக்கணங்களை விளக்குவது... ... ... ... ... ... ... ... ... ... | | ௨௦ |
| ௯. | மேகதூதக்காரிகை. இயக்கன் ஒருவன் தன் மனைவிக்குக் கார்கால முகில்வாயிலாகத் தூதுசொல்லி விடுத்ததாகப் பலவித வர்ணனைகளமைத்து வடமொழியிலே காளிதாச மகாகவி செய்த மேகதூதத்தின் மொழிபெயர்ப்பாய்க் கட்டளைக்கலித்துறையிற் செய்தது. போசராச காளிதாச சரித்திரச்சுருக்கமும் முகவுரையிலுண்டு... ... ... ... ... ... ... | | ௨௫ |
| ௧௦. | சூடாமணிநிகண்டு. ௧-வது. சொற்பொருளோடு ... ... ... ... | | ௨௫ |
| ௧௧. | சூடாமணிநிகண்டு. ௨-வது. சொற்பொருளோடு ... ... ... ... | | ௩௦ |
| ௧௨. | நகுலமலைக்குறவஞ்சிநாடகம்... ... ... ... ... ... ... ... | | ௩௬ |
| ௧௩. | ஆசாரக்கோவை. சங்கச் செய்யுள்களாகிய நாலடியார் முதலிய பதினெண்கீழ்க்கணக்குள் ஒன்றாயும் பலவித ஆசாரங்களைச் சொல்வதாயு முள்ளது. ... ... ... ... ... ... ... ... | | ௪௦ |
| ௧௪. | ஏகவிருத்தபாரதாதி. இதன்கண் ஒவ்வொரு விருத்தத்திலே பாரதராமாயணசரிதமும் பலவித விநோதசித்திர வினாவுத்தரக்கவிகளும் சிவத்தோத்திரமுமுள்ளன... ... ... ... ... | | ௮ |
| ௧௫. | மிலேச்சமதவிகற்பக்கும்மி... ... ... ... ... ... ... ... | | ௧௦ |
| ௧௬. | நகுலேசுவரரூஞ்சலுந் தசகமும்... ... ... ... ... ... ... | | ௬ |

தபாற்கூலி வேறே.

சுன்னாகம்
விகாரிஞூ பங்குனிமீ.

இங்ஙனம்,
அ. குமாரசுவாமிப்பிள்ளை.